# நவரத்தினங்கள்

திருச்சி வானொலிப் பேச்சு

T. S. வைத்தியநாதன்





இலவச வெளியீடு
...ாவடுதுறை ஆதீனம்
1958

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# ஸ்ரீ ஞானமா நடராஜமூர்த்தி

# ஆனித்திருமஞ்சன விழாமலர்

விளம்பி - ஆனி - உத்திரம்





திருவாவடுதுறை

24-6-1958.

உ
சிவமயம்

# நவரத்தினங்கள்



ஆக்கியோன் :
**T. S. வைத்தியநாதன்**

இலவசவெளியீடு
திருவாவடுதுறை ஆதீனம்
1958



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்தொன்றாவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ
சிவமயம்

# முன்னுரை

---

## உயர்திரு. N. சோமசுந்தரம் பிள்ளை அவர்கள்

சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி

நவரத்தினங்களைப்பற்றி இரத்தினச் சுருக்கமாகக் கூறுகிறது இந்தச் சிறிய நூல். திருச்சி வானொலியிலே ஒலிபரப்பிய மூன்று பேச்சுக்களின் தொகுப்பு இது. திருவாவடுதுறை குருமகாசந்நிதானம் அவர்களின் வாழ்த்தோடு இப்பொழுது இலவச வெளியீடாக இந்நூல் வெளிவருகிறது.

அணிகலன்களின் விருப்பம் நிரம்பிய நாடு நமது தமிழ்நாடு. எத்தனையோ பல நூற்றுண்டுகளாக நவரத்தினங்களை ஆராய்ந்து அனுபவித்து, அவற்றின் நுட்பங்களையெல்லாம் விரிவாகக்கண்டு கூறிய நம்முடைய முன்னோர்கள், தாங்கள் கண்டுபிடித்த உண்மைகளையெல்லாம் பல ஆராய்ச்சி நூல்களாக நிரந்தரமான முறையிலே நமக்குக் கொடுத்திருக்கிறார்கள். அவற்றையெல்லாம் இக்காலத் தமிழ்மக்கள் அறிந்துகொள்ளவேண்டியது மிகவும் அவசியமாகும். அதற்கு இந்த நூல் பெருந்துணைபுரியும்.

இரத்தினங்களின் தோற்றம், வகை, மதிப்பு, அவற்றின் சோதிட இயல், வைத்தியச்செய்முறை முதலிய பல செய்திகளையும் ஆசிரியர் டி. எஸ். வைத்தியநாதன் அவர்கள் நன்கு தேர்ந்தெடுத்து, வரிசைப்படுத்தி, நூலிலே கோத்து, ஒரு நவரத்தின மாலையைப்போன்று இந்தப் புஸ்தகத்தை வழங்கியிருக்கிறார்கள். அன்னாருடைய தொண்டைப் பாராட்டுகிறேன். இந்த அழகிய நூலை இலவசமாக வெளியிட்டுதவும் திருவாவடுதுறை ஆதீனத் தலைவரின் பேரன்புக்குத் தமிழ்நாட்டின் நன்றி உரியது.

சிவமயம்

# தொடர்புரை

---

அருமையாகக் கிடைப்பனவற்றிற்கு மதிப்பு அதிகம். மலையைக்கல்லி மணிகளை அடைகிறோம். ஆழத்தில் மூழ்கி அழகிய முத்துக்களையும் பவளங்களையும் பெறுகிறோம். இதில் உழைப்பும் தியாகமும் மிகுதி; பயன் குறைவு. அதனால் மணிகளின் மதிப்பு ஒன்றுக்கு நூறுமடங்கு உயர்கிறது. மதிப்பால் மட்டுமா? அழகு, தெய்வீகசக்தி, ஒளி, மருந்துத் தன்மை இவற்றாலும். ஆதலால் நவரத்தினங்களைப் பற்றி நாம் தெரிந்துகொள்ளவேண்டியது அவசியம். அவைபற்றி மிகச் சுருக்கமாக விளக்குவன இந்தப் பேச்சுக்கள் மூன்றும். இதனைப்படித்து இன்புறுக.

இந்த மூன்று பேச்சுக்களையும், ஆதீன வெளியீடாக அச்சிட்டு வழங்கத் திருவுளங்கொண்ட திருவாவடுதுறை ஆதீனம் குருமகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரியசுவாமிகள் அவர்களது பொன்னார் திருவடிகளுக்குப் பெரிதும் கடப்பாடுடையேன்.

இந்தச்சிறு நூலுக்குச் சிறந்த முன்னுரையை உதவி மேலும் மேலும் இத்தகைய ஆராய்ச்சிகளில் ஈடுபடுதற்கு ஊக்கம் அளித்தவர்களாகிய சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி உயர்சைவத் திருவாளர் N. சோமசுந்தரம் பிள்ளை அவர்கட்கு என்னுடைய உளமுவந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

திருச்சி வானொலியில் 25-2-58, 18-3-58, 1-4-58 ஆகிய இம்மூன்று நாட்களில் நிகழ்த்திய இப்பேச்சுக்களை அச்சிட்டுக்கொள்ள அனுமதிதந்த வானொலி நிலையத்திற்கு என்நன்றி உரித்தாகுக.

இதனைப் படித்துப் பாராட்டும் பண்புடைப் பெருமக்களுக்கு என் அன்பு உரியது.

வணக்கம்,

ஆக்கியோன்.

உ
சிவமயம்

# நவரத்தினங்கள்

## முதல் பேச்சு

கருத்து ஊர்தியில் ஏறி, காலமாகிய வானில் நெடுந் தூரஞ்சென்று தேடினுல் நவமணிகளின் தோற்றம் இலக்கியமலைகளிலே எங்கெல்லாம் காணப்படுகின் றன என்று ஒருவாறு அறியக்கூடும்.

முதன்முதல் மக்கள் இயற்கையோடு இசைந்த வாழ்வைத் தொடங்கியகாலத்து தழைவீடு, தழை யுடை, தளிரணி, பூவணி இவற்றையே மேற்கொண் டனர். வீடு குடிலாக - மண்தளமாக மாறியகாலத் தும் தங்களை அழகு செய்துகொள்ளப் பலநிறப் பூக்களையே பயன்படுத்தி வந்தனர். இவ்வளவும் கற்கால நாகரிகத்துச்செய்தி.

உலோக நாகரிகம் பரவத்தொடங்கியகாலத்து என்றும் மாருத - வாடாத நிறமுடைய வெள்ளியும் பொன்னும் அணிகளாகப் பயன்பட்டன. ஒளிமழுங் காத வக்கா முதலிய பறவைகளின் காலெலும்புகளும், சங்குமுதலியவற்றைத்தேய்த்து உருட்டிய மணிகளும் அழகுச்சாதனங்களாக ஆயின. ஆயினும் பலநிறப் பூக்களை அணிந்து மகிழ்ந்த மக்களுக்கு இவை அமைதி அளிக்கவில்லை. ஆதலால் நிறம் குன்ருத பல பொருள்களை அணிகளில் அழுத்தித் தரித்துக்கொள்ள

வேண்டும் என்ற ஆசை மிகுவதாயிற்று. அப்போது இயற்கை அன்னையின் உதவியால் ஆற்றோரங்களிலும், அருவிக்கரைகளிலும், அறுத்தோடிகளிலும் பலநிற முள்ள கற்கள் நீரால் மாசு கழுவப்பெற்று, சூரிய ஒளிபட்டு விளங்கின. அவற்றைக்கண்ட - இயற்கை யோடு இசைந்த வாழ்வையுடைய மனிதன் அவற்றை எடுத்துப் பொறுக்கி, அணிகளில் அழுத்தி, அணிந்து மகிழ்வானாயினன். அவனுக்கு மணிகளைத் தன் விருப் பம்போல மாற்றி அமைக்கும் ஆற்றல் முதன்முதல் இல்லாமையால் கிடைத்த போக்கிலேயே அதனை அமைத்து அணிந்துகொண்டான். ஒருவன் அணிந்த தைக் கண்டு ஏனையோரும் விரும்பினார்கள். ஆனால் மணிகளோ எங்கும் - என்றும் - எளிமையில் கிடைப் பதில்லை. ஆகவே அருமைக்குத்தக மக்களுக்கு ஆசை யும் மிகுவதாயிற்று. ஆசைக்கு ஏற்ப மணிகளின் மதிப்பும் உயர்வதாயிற்று.

பருக்கைக் கற்களும், கூழாங்கற்களும், நவமணி களும் நிலஅன்னை கருவிலிருந்து வெளிவந்தனவே. ஒரு தாய் பத்து மக்களைப் பெற்றாலும் உள்ளத்தில் உண்மை ஒளியுடைய மகன் ஒருவனேயாதல்போல - அவனை உலகில் உயர்ந்தவனாக அனைவரும் மதித்தல் போல உண்மையொளியுடைய நவமணிகள் யாவ ராலும் மதிக்கப்பெறுதல் இயல்புதானே.

இலக்கியங்களில்,

"பொன்னும் துகிரும் முத்தும் மன்னிய
மாமலை பயந்த காமரு மணியும்

இடைபடச் சேய ஆயினும் தொடைபுணர்ந்து
அருவிலை நன்கலம் அமைக்கும் காலை
ஒருவழித் தோன்றியாங்கு ”

என்றும்,

“ அருவிலை நன்கலம் வயிரமொடு கொண்டு
பெருவிறன் மூதூர்த் தந்து பிறர்க்குதவி ”

என்றும் நவமணிகள் பாராட்டப்படுகின்றன. நவ மணிகளில் ஆசை மிகமிக, காதன்மை மிக்க பொருளுக்கெல்லாம் எடுத்துக்காட்டாக இருக்கும் நிலையும் இலக்கிய உலகிலே பிறந்துவிட்டது.

கண்ணகியின் கற்பொழுக்கத்தில் மனம் கனிந்த கோவலன்,

“ மாசறு பொன்னே வலம்புரி முத்தே
மலையிடைப் பிறவா மணியே என்கோ?”

என்றெல்லாம் கண்ணகியின் நலத்தைப் பாராட்டுகிறான். இங்ஙனம் காதன்மையின் இலட்சியமாக விளங்கிய நவமணிகள் கடவுள் தன்மையையும் கைவிட்டனவா ? இல்லை.

“ மாநீர் முத்தை மரகதத்தை மாமணியை ”

என்று அப்பர்சுவாமிகள் இறைவனைப் போற்றுகிறார்.

அப்பர்சுவாமிகள் மணிகளைக் கூழாங்கற்களென்று உழவாரத்தால் வாரி எறிந்தவர் என்பதையும் நாம் இங்கு மறந்துவிடக்கூடாது. அவருக்கு மணிகளில் வெறுப்பிருந்தாலும் உள்ளத்தில் உயர்வு குறையாமையால், உயர்வற உயர்ந்த பொருளாகிய இறைவனை அவர் மணியாக - மரகதமாக - முத்தாகச் சொல்லி இன்புறுகிறார்.

அமராவதி நதிக்கரையில் கிடைத்த பவுத்த சிற்பங்களின்மீது அணிகளும் அணிகளில் அழுத்திய கற்களும் காணப்படுகின்றன. சில பெண் உருவங்களில், செந்தாமரைப் பூவைப்போன்ற செந்நிறக் கற்கள் அழுத்தப்பெற்ற திருகுவில்லைகளும் காணப்படுகின்றன. இது கி. பி. 400 முதல் கி. மு. 200 வரையுள்ள சிற்பமாக இருக்கலாமென்று சிற்பநூல்வல்லார் தெளிகின்றனர். ஆகவே நவமணிகள் கி. மு. 200 வரையில் எட்டிப் பிடித்துவிட்டன என்னலாம். அதற்கு மேலும் கி. மு. 604-ல் வாழ்ந்தவராகக் கருதப்படும் லாஒட்சேயின் சிறந்த சீடரான சாவுட்சே தம்முடைய உபதேசங்களில் ஒன்றாக, 'நவரத்தினங்களைத் தெருவில் வீசி எறிந்துவிட்டால் நாட்டில் திருட்டு நின்றுபோகும்' என்கிறார். இதிலிருந்து எல்லா நாட்டினராலும் மதிக்கப்படும் பொருளாக நவமணிகள் இருந்தமை நன்கு புலனாகிறது.

கற்களின் இடையில் இடைவெளிக்கு ஏற்ப வளர்ந்த மணிகள் எவ்வாறு மக்கள் வசதிக்குத்தக அழகுச் சாதனங்களாக ஆயின என்று ஆராய்வதும் அவசியம். இயற்கை வடிவத்தை மாசு போக்கி

அணிந்துவந்த மக்கள் மணிகளின் மேற்பரப்பிலுள்ள நிறத்திற்காகமட்டும் அவைகளை விரும்பினர்கள். உள்ளொளி என்பது ஒன்று உண்டு என்பதை அவர்கள் உணரவில்லை. அதனல் மனிதனுடைய தலையைப் போல உருவாக்கி, தொங்கட்டமாகவும் மாலையாகக் கோத்தும் அணிந்து வந்தனர். இலேசில் தேயக்கூடிய பச்சை முதலான மெல்லிய கற்களே இவ்வாறு பயன் படுத்தப்பட்டன. ஒளியுள்ள வெண்பளிங்குக் கற்களைக் குவிகண்ணுடியாகக் குடையத்தொடங்கிய போது, குறுக்கும் நெடுக்குமாகவிழுந்த குடைகோண உடைசல்களால் ஒளி ஒன்றிற்பட்டு மற்றென்றில் தாக்கி வெளியில் ஊடுருவி வருவதைக்கண்டார்கள். கண்டபிறகு மேற்பரப்பிலும் பட்டைதீட்டி ஒளியைப் பெருக்கும் உபாயம் வெளிப்பட்டது. இதனல் விளைந்த நன்மை மக்கள் மணியின் உள்ளொளியைக் கண்டு மகிழ்ந்த ஒன்று. விளைந்ததீமை மட்டரகமான-நன்ருக விளையாத - குற்றங்கள் பொருந்திய மணிகளும் துண்டமாகி, பலகோணப் பட்டைகள் இடப்பெற்று, பகட்டான மதிப்பை அடைந்ததொன்றே. எப்படியாயினும் மணிகள் இயற்கை வடிவம் மாறி எழிலமைந்த வடிவு பெற்றது என்பதே இங்கு நாம் எண்ணத்தக்கது.

பழங்காலத்தில் மணிகளை அணிகளாக அணிந்து கொண்டதன்றி, ஒளியிழந்த கண்களுக்கும் ஒளி பொறுக்காத கண்களுக்கும் கண்ணுடியாகப் பயன் படுத்தினர். பேரரசர் நியூரோ என்பவர் வாட்சண்டைகளைப் பார்க்க மரகதத்தால் இயன்ற கண்ணுடியைப் பயன்படுத்தினர் என்று அறிகிருேம்.

இங்ஙனம் பலவகையிலும் பயன்பட்டுவந்த நவ மணிகள் முத்து. மரகதம், மாணிக்கம், நீலம், புட்ப ராகம், வைடூரியம், கோமேதகம், பவளம், வயிரம் என்பன. இந்த ஒன்பது மணிகளிலும் தலைசிறந்த மணி வயிரமே. அதனை அடுத்து மதிக்கத்தக்கவை முத்து, மரகதம், மாணிக்கம் என்ற மூன்று. முதலில் வயிரத்தைப்பற்றிச் சிந்திப்போம்.

வயிரம் மிக உறுதியானது. ஆனால் கீழேவிழுந் தால் சிதறும் இயல்பினது. உடலில் அணிந்துகொள் வதால் தேயாதது. இதன் உறுதியைப்பற்றி,

“வயிர ஊசியும் மயன்வினை இரும்பும்
செயிரறு பொன்னைச் செம்மைசெய் ஆணியும்
தமக்கமை கருவியும் தாமாம்”

எனப் பேரகத்தியச் சூத்திரம் பேசுகிறது. வயிரச் சன்னம்ஒன்று கண்ணாடியை அறுக்கும் வன்மையது.

வயிரத்தின் ஒளியிலிருந்து, பூமிதேவி தன் கருவி லிருந்துகொடுத்த ஒருகனிப்பொருள் அது என்று எண் ணிய காலம் ஒன்று உண்டு. இப்போதுள்ள விஞ்ஞான ஆய்வாளர்கள் வயிரம் திராவகங்களில் கரையாத - சாதாரணவெப்பத்திற்கும் நிறம்மாறாத - நிலைகுலையாத ஒரு கரிப்பொருள் என்று உறுதிப்படுத்துகிறார்கள். பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பு இயற்கையில் ஏற் பட்ட மாற்றத்தால் மண்ணால் புதையுண்டமரங்கள் அடர்ந்த காடுகள் நிலக்கரிப்பாறைகளாயின. பூமியின் தட்பவெப்பங்களுக்கும் அழுத்தும் வன்மைக்கும்

இலக்காகிய நிலக்கரிப்பாறைகள் இறுக்கம்பெற்று வயிரமணிப் பாறைகளாக மாறின. இந்த முடிபை விஞ்ஞானிகள் ஆக்ஸிஜன் ஜ்வாலையால் வயிரத்தை எரிக்க அதிலிருந்து கரியமிலவாயு ஒன்றே உண்டாவதைக் கண்டார்கள். காற்றுப்புகாத ஒருகுடுவையில் வயிரத்தை இட்டு, இரும்பு உருகத்தக்க கொதிநிலையில் காய்ச்சியபோது அது எழுதுகரியாவதைக் கண்டார்கள். அதனால் கரிக்குழந்தையிலிருந்து, நிலக்கரிக் குமரனாய், கிராபைட் காளையாய், வயிரமாக முதிர்ச்சி அடைந்தது என்று கண்டார்கள்.

சரித்திர காலத்திலிருந்த மன்னர்கள் சிறந்த வயிரங்களுக்காகவே போர்செய்து மடிந்திருக்கிறார்கள். இங்கிலாந்து அரசியின் மணிமகுடத்திலிருந்து ஒளிவீசுவது நம்நாட்டிலிருந்து கிடைத்த கோஹினூர் வயிரமே. மொகலாய மன்னரின் ஆட்சிக் காலத்தில் மயிலாசனத்தின் முடிமணியாக விளங்கிய கோஹினூர் வயிரத்தை கி. பி. 1730-ல் நாதிர்ஷா என்ற பாரஸீக மன்னன் கைப்பற்றினன். 1813-ல் அது லாகூர் அரசன் கைக்கு மாறியது. பின் கிழக்கிந்தியக் கம்பெனியார் வழியாக 1850-ல் விக்டோரியாமகாராணியிடம் சென்றது. இன்றுவரை பிரிட்டிஷாரிடமே தங்கிவிட்டது.

உலக வயிரச்சுரங்கங்களில் ''கோல்கொண்டா'' சுரங்கம் மிகச் சிறந்தது. இன்று நாட்டில் மதிப்புடன் விளங்கும் 'பிட்' 'ரீஜென்ட்' 'கோஹினூர்' வயிரங்கள் கோல்கொண்டா சுரங்கத்தைச் சார்ந்தனவே. நவரத்தினப் பிரியரான ஷாஜஹான் கோல்கொண்டாமீது படையெடுத்து, அந்நாட்டு மன்னன்

கப்பம்கட்டவும் ஏற்றுக்கொள்ளாது.போர்தொடுத்து நாட்டைக் கைப்பற்றினன். எதற்காக? இந்த வயிரச் சுரங்கத்துக்காகத்தான். ஷாஜஹான் பொக்கிஷத்தில் ஜஹாங்கிர் தயாரித்த பட்டியல்படி பட்டை தீட்டாத வயிரம் 80 ராத்தல் இருந்தன என்று தெரிகிறது. மேலும் வயிரக்கல் பதித்த 2000 கத்திப் பிடிகளும் இருந்தனவாம்.

இந்தியாவே முதன்முதல் வயிரத்தின் மதிப்பை அறிந்து, பட்டையும் சாணையுந்தீட்டிப் பயன்படுத்திய நாடு; ஏனைய நாடுகள் இந்தியாவைப் பார்த்துத்தான் உணரத்தலைப்பட்டன என்பதை எல்லா வரலாற்று ஆசிரியர்களும் ஒத்துக்கொள்ளுகின்றனர் என்ற உண்மை மட்டும் உறுதியானது. தரமும் குணமும் பார்த்து வயிரங்களைப் பன்னிரண்டு வகைகளாகப் பிரித்துவைத்திருந்தனர்.

இரத்தினபரீக்ஷை என்னும் வடமொழிநூலில் ஆண்வயிரம், பெண்வயிரம், அலிவயிரம் என வயிரங்கள் முத்திறப்படுமென்று கூறப்பட்டுள்ளது. கத்தரிக்காயின் மேல்பாகத்திலிருக்கும் இரேகைகளைப்போல் விந்துக்கள் இல்லாததாய், நல்ல ஒளியுடன் வட்டமாகவும் பெரியதாகவும் இருப்பது ஆண்வயிரம். ரேகை விந்து இவைகளுடன் அறுகோணமாக இருப்பது பெண் வயிரம். மேலும் காகபாதம் முதலிய சிறு குற்றங்கள் உடையதாய் நீலநிறமாகவும் சிறியதாகவும் இருக்கும். முக்கோணம் விந்து இவைகளுடன் நீலமாக இருப்பது அலிவயிரம். இவற்றுள் ஆண்சாதி வயிரமே மிகச்சிறந்தது.

"எவன் வீட்டில் ஆண்வயிரம் எப்பொழுதும் இருக்கின்றதோ அவன் அதிர்ஷ்டம் உடையவன்; நான்குவித புருஷார்த்தங்களையும் அவன் அடைவான்; எல்லா நன்மைகளையும் அடைவான்"

என்று இரத்தினபரீக்ஷை என்ற நூல் இரத்தினோற்பத்தி 33-வது சுலோகத்தில் சொல்லுகிறது.

"எவனது பெட்டியில் பெண்வயிரம் எப்பொழுதும் இருக்கின்றதோ அவன் சிறந்த இரத்தினங்களையும் சந்தான விருத்தியையும் அடைவான்"

என்றும்,

"அலிவயிரம் உடையவன் வீட்டில் வறுமையும் பிணியும் இருந்து உடையவனை வாட்டும்"

என்றும் அந்நூல் அறிவிக்கிறது.

"வாழ்பவனுக்கு வயிரம்"

என்ற பழமொழியும் சிந்தித்தற்குரியது. சிலப்பதிகாரத்தில்,

"காக பாதமும் களங்கமும் விந்துவும்
ஏகையும் நீங்கி இயல்பில் குன்று
நூலவர் நொடிந்த நுழை நுண்கோடி
நால்வகை வருணத்து நலங்கேழ் ஒளியவும்"

என்று வயிரத்தின் குண தோஷங்கள் கூறப்பட்டுள்ளன. இரத்தினபரீக்ஷையில் வயிரத்தின் குணங்கள் ஐந்து என்று சொல்லப்படுகிறது. அறுகோணமாக இருத்தல், இலேசாயிருத்தல், சமமான எட்டுத்தளங்களுடைமை, கூரியமுனைகளுடைமை, தெளிவுடைமை இந்த ஐந்தும் குணங்கள். புள்ளி, கோடு, நீரோட்டம், அழுக்கு, காகபாதம் இவ்வைந்தும் குற்றங்கள்.

இவற்றையே சிலப்பதிகார இளங்கோவடிகள் முறையே விந்து, ரேகை, காகபாதம், களங்கம் என்கிறார். நீரோட்டத்தை அடிகள் குற்றமாகக் கருதாதது சிந்திக்கத்தக்கது. காகபாதம் என்பது காக்கையின் அடிச்சுவடுபோல் புள்ளடிக்கீறுகள் விழுந்திருத்தல். இத்தகைய குற்றங்கள் சிறிதும் இன்றி, குணங்கள் நிறைந்த வயிரங்களே மக்களால் அணியத்தக்கன.

நிறம்பற்றி நான்கு சாதிகளாக வயிரங்கள் பிரிக்கப்பட்டுள்ளன. அதாவது வெள்ளை, சிகப்பு, பச்சை, நீலம்.

வயிரம் அணிவகைகளுள் ஒன்றாகக் கொள்ளப்பட்டதோடுமட்டும் அல்லாமல் மனிதனுடைய கோள் மாறாட்டக் குற்றங்களைச் சரிப்படுத்தும் சாதனமாகவும் இருந்துவந்தது என்பதைச் சோதிடநூலால் தெரிந்துகொள்ளலாம். ஒவ்வொரு மணிக்கும் அதிதேவதைகளைச் சொல்லிவருகிற சோதிடநூல் இவ்வயிரத்திற்குச் செல்வ நிலைக்களனாகிய சுக்கிரனைத் தெய்வமாகக் குறிக்கின்றது. ஆதலால் வயிரத்தை

அணிபவர்களுக்குச் சுக்கிரன் பார்வையால் செல்வம் கொழிப்பதில் தடை என்ன ?

மக்களுக்கு இயற்கை மாறுபாட்டால் ஏற்படும் ரோகங்களைப்போக்கும் மருந்தாகவும் வயிரம் பயன் படுகிறது என்று வயித்தியநூல்கள் கூறுகின்றன. சில நோய்களுக்கு வயிரத்தை அணிந்தாலேபோதும்; நோய் நீங்கிவிடும்.

"ஆறுவிதமாம் வயிரம்
அவற்றுள் மாரசங்கள்
வீறு நிலைத்திருக்கும்
மேன்மையினல் - கூறுமவைக்கு
எப்பிணியும் நீங்கும்
இணையில் வனப்பும் உண்டாம்
செப்பணியும் மாமுலையாய் செப்பு"

என்ற பதார்த்தகுணசிந்தாமணிப் பாடலைப்பாருங்கள்.

அனுபவவயித்திய தேவரகசியம் என்ற நூலில் இரண்டாவது காண்டத்தில் வயிரத்தைப்பற்றிக் கூறப் பட்டுள்ளது. கண்டங்கத்தரிவேர்ச்சாற்றில் வயிரத்தை ஊறவைத்து, நன்ருகக் கழுவி எடுத்துக்கொண்டு, கொள்ளு தினைஅரிசி இவற்றை இடித்துக் காய்ச்சிய கஞ்சியில் வயிரத்தை நூலில் கட்டித் தொங்கவிட்டு இளந்தீயில் மூன்று நாள் சூடேற்றவேண்டும். அப் படிச் செய்தால் வயிரம் மருந்துக்குரிய சுத்தத்தை அடையும். சுத்தம் செய்யப்பட்ட அவ்வயிரத்தை வயது முதிர்ந்த பருத்திச்செடிவேரின் சாற்றிலேனும்,

வெற்றிலைக்கொடி வேரின் சாற்றிலேனும் ஊற வைத்து, பருத்திக்கல்கம் வெற்றிலைக்கல்கம் இவற்றில் வைத்து மூடி, சீலைமண்செய்து ஏழுமுறை கஜபுடம் போட்டால் வயிரம் பஸ்மமாகும். இந்தப் பஸ்மத்தை உட்கொண்டால் ஆயுள் வளரும்; உடல் அழகு பெறும்; பலம் உண்டாகும்.

இந்தப் பஸ்மத்தைக் கருங்காலிக் கஷாயத்தில் கலந்து உட்கொண்டால் குஷ்டரோகம் நீங்கும். தேன் அல்லது இஞ்சிச்சாற்றில் கலந்து உட்கொண்டால் வாதநோய் அகலும். ஆடாதொடைச் சாற்றுடன் கலந்து சாப்பிட்டால் காசம் கபம் எல்லாம் நீங்கும். இவ்வளவு நன்மைகளைச் செய்யும் வயிரம் பெருந்தீமையையும் செய்யும். எப்படி? வயிரத்தைப் பொடிசெய்து உண்டால் போதும்; உண்டவன் உயிரைப்போக்கிவிடும். அதிலும் தப்பிப் பிழைக்க வழி இல்லாமல் இல்லை. வயிரத்தூளை உண்டவரிடத்தில் கோழிமுட்டையின் கருக்குழம்பைக் கொடுத்து அடிக்கடி குடிக்கச் செய்தால் அவன் பிழைத்துக் கொள்வான்.

மேலும், வயிரம் அணிந்தால் சந்ததி விருத்தியைக் கட்டுப்படுத்தலாம் என்ற கொள்கையும் நிலவுகிறது. ஆண்மகவை விரும்பும் ஒரு பெண் எக்காரணத்தைக் கொண்டும் வயிரத்தை அணியக்கூடாது என்றும், ஆண் வயிரங்கள் உலோகங்களை மாற்றுவதற்கும் பாதரசத்தைக் கட்டியாக்குவதற்கும் உதவுகின்றன என்றும், மிகச் சிறந்த தன்மையுள்ள வயிரங்கள் தண்ணீரின்மேல் மிதக்கக்கூடிய அளவு அவ்வளவு

கனம் குறைவாக இருக்கின்றன என்றும் ரசஜலநிதி, இரத்தினபரீக்ஷை என்னும் நூல்கள் கூறுகின்றன.

இப்படி, உண்மை வயிரம் அழகுச் சாதனமாக மட்டுமின்றி, அருமருந்தாகவும் பயன்படுகிறது என்பதை இதுவரையில் பார்த்தோம். இங்ஙனமே ஏனைய மணிகளாகிய முத்து, மரகதம், மாணிக்கம், நீலம் முதலியவற்றைப்பற்றி அடுத்துச் சிந்திப்போம்.

# இரண்டாவது பேச்சு

'கட்டிமுத்தே! கைக்காதே செங்கரும்பே!' என்று தாய் குழந்தையைத் தாலாட்டுகிருள். அடுத்து இலக்கியப்பூங்காவில் நுழைந்து விளையாடுகிறகாலத்து,

"கோவா மலையாரம் கோத்த கடலாரம்"

என்று சிலம்புச்செல்வர் இளங்கோவடிகள் கூறுவது நினைவுக்கு வருகிறது. தம்பி முத்துமுத்தாக எழுது கிருன்; முத்துப்போன்ற பல் என்ற வழக்காறுகளும் உள.

"முத்தன்ன வெண்ணகையாய்"

"ஒள் நித்தில நகையாய்"

என்று மாணிக்கவாசகரும் மகிழ்ந்து கூறுகிருர். ஆகவே முத்து ஒரு தனி மதிப்புப் பெற்றிருப்பது நன்கு தெளிவாகிறது. திருத்தகு நாடாகிய தமிழ் நாட்டைப்போல் அண்டர்நாடு,

"எத்திறத்தினும் ஏழுலகும் புகழ்
முத்தும் முத்தமிழும் தந்து முற்றுமோ"

என்று கம்பர் எக்களித்துப் பாடுகிருர்.

முத்து தமிழர் நாகரிகத்தின் தலைசிறந்த சின்னம். தமிழ் மூதாட்டியாகிய ஔவை ஒவ்வொரு நாட்டின் வளத்தையும் அறுதியிட்டுக் கூறுகின்றவள்,

"பூழியர்கோன் தென்னுடு முத்துடைத்து"

என்று பாராட்டுகிருள். பாண்டிநாட்டின் பழம் பெருமை முத்திலேதான் இருக்கிறது என்பது அவள் கண்ட முடிபு.

பாண்டிநாட்டுக் கடற்கரை ஓரத்திலே ஒரு அழகான நிகழ்ச்சிச் சித்திரம். ஏழாண்டு நிரம்பப் பெருத இளம்பேதை ஒருத்தி மணல்வீடு கட்டி விளை யாடுகிருள். அவள் வீட்டைக் கடல் அலைகள் அடித் துக்கொண்டு போகின்றன. கடல்மீது அவளுக்குக் கடுங்கோபம். தன் கழுத்திலே அணிந்திருந்த முத்து மாலையை அறுத்து எறிகிருள். அலைகடலே! இரு இரு; அம்மாவிடம் சொல்லுகிறேன் என்று ஓடுகிருள். அங்கே புன்னையரும்புகளும் உதிர்ந்து கிடக்கின்றன. வழிப்போக்கர்கள் புன்னையரும்புக்கும் முத்துக்கும் வேறுபாடு தெரியாது மயங்குகிருர்கள். இதிலிருந்து பாண்டிநாட்டில் முத்துக்கள் மிகவும் மலிந்துள்ளன என்பது தெரியவருகிறது.

தொன்றுதொட்டே இயற்கை அழகும், ஒளியும், நலமும் படைத்த முத்துக்கள் எங்கெங்கே உண்டா கின்றன என்பதைப்பற்றிப் பார்ப்பதும் மிக இன்றி யமையாதது. இரத்தினபரீக்ஷை என்ற நூல் யானையி னுடைய மத்தகத்திலிருந்தும், பாம்பு மீன் இவற்றின் தலைகளிலிருந்தும், மேகத்திலிருந்தும், சங்கு சிப்பி ஆகியவைகளிலிருந்தும் முத்துக்கள் உண்டாகின்றன என்று கூறுகிறது. இரத்தினசாரசங்கிரகம், ஆலாஸ்ய மான்மியம், ஸ்மிருதி சாரோத்தரம் முதலான ஏனைய

நூல்களும் சிற்சில மாறுதல்களோடு கரும்பு, நெல் இவைகளையும் முத்துப் பிறக்கும் இடங்களாகச் சேர்த்து மொழிகின்றன. பரஞ்சோதிமுனிவர் நீரில் பிறப்பனவும் நிலத்தில் பிறப்பனவுமாக முத்துக்களை இருவகையாகப் பிரித்தார். இவற்றை வடநூல்கள் ஜலஜம், ஸ்தலஜம் எனக் கூறுகின்றன. இரத்தினச் சுருக்கம் என்ற தமிழ்நூல்,

" தந்தி வராகம் மருப்பு இப்பி
பூகம் தனிக்கதலி
நந்து சலஞ்சலம் மீன்தலை
கொக்கு நளினமின்னார்
கந்தரம் சாலி கழைகன்னல்
ஆவின்பல் கட்செவிகார்
இந்து உடும்பு கராம் முத்தம்
ஈனும் இருபதுமே"

என முத்துப் பிறக்கும் இடங்கள் இருபது என்கிறது. குமரகுருபரசுவாமிகள் மதுரை அங்கயற்கண் அம்மையைக் குழந்தையாகப் பாவித்து, முத்துப் பிறக்கும் இடங்கள் சிலவற்றைச் சொல்லி, இவ்விடங்களிலிருந்து பிறந்த முத்துக்கள் நின்வாய் முத்தத்திற்கு ஒவ்வா என்று கவிதைநயம்படக் காட்டுகிறார்.

இத்தகைய சிறப்புடைய முத்துக்குப் பொன்னைப் போல் காட்சி இன்பம் கிடையாது. ஆனால் தங்கத்திற்கு இல்லாத ஊற்றின்பம் முத்துக்கு உண்டு. அதை அணிந்துகொண்டால் உடம்பின் சூட்டைக்களைந்து குளிர்ச்சியான இன்ப உணர்ச்சியை உடலுக்கு

அளிக்கும். அந்த நிலையில் முத்து அருவிலை உடைய தாய்ப் பொன்னையும் மிஞ்சி மதிக்கப்படுகின்றது. இப்பியில் விளையும் முத்தைவிட வலம்புரிச்சங்கில் விளையும் முத்து சாலச்சிறந்தது. எனவே,

"மாசறு பொன்னே! வலம்புரி முத்தே!"

என்று கோவலன் கண்ணகியைப் பாராட்டியதாகக் கூறப்படுகிறது. அலையால் மொத்துண்டுவரும் வலம்புரிகள் கரைமணலில் முத்தை இட்டுவைக்குமாம்.

"கத்தும் தரங்கம் எடுத்தெறியக்
கடுஞ்சூல் உளைந்து வலம்புரிகள்
கரையில் தவழ்ந்து வாலுகத்தில்
கான்ற மணிக்கு விலையுண்டு"

என வரும் பகழிக்கூத்தரின் பாடல் அடிகளாலும் அறியலாம்.

முத்துப்பிறக்கும் இடங்களில் மேகத்திலிருந்து உண்டாகும் முத்துக்கள் தேவர்களுக்குமட்டுந்தான் கிடைப்பன; யானை பாம்பு இவற்றிலிருந்து தோன்றும் முத்துக்கள் முனிவர்களுக்குமட்டுமே கிடைக்கக் கூடியன; கரும்பு, நெற்பயிர் இவற்றிலிருந்து வெளிப்படும் முத்துக்கள் பெரும் புண்ணியவான்களுக்கு மாத்திரம் கிடைப்பன; கலியுகத்தில் அனைவருக்கும் கிடைப்பன சிப்பிமுத்துக்களே என்று வடமொழிநூல்கள் சொல்லுகின்றன. இதனால் சிப்பிமுத்து நீங்கலான ஏனையமுத்துக்கள் கவியுலகம் ஒன்றிலேயே

காட்சி அளிப்பன; காட்சியுலகத்தில் கிடைக்காதன என்று எண்ணிவிடக்கூடாது. கம்பனுகிய கவி முத்தைப் பாதுகாத்த சடையப்பவள்ளல் காலத்தில் ஒரு வணிகன் கடல்முத்துக்களைக் கொண்டுவந்து, சோழமன்னனின் முன்புவைத்து 'இவை அரசர்க்கே 'உரியன' எனப் புகழ்ந்தானும். இதைக்கண்ட வள்ளல் தன் வயலிலிருந்து சில கரும்புகளையும் நெற்பயிர்களை யும் கொண்டுவரச்செய்து, அவற்றிலிருந்து முத்துக் களை எடுத்து அரசன் முன்பு வைத்து, 'அளம்படு கடலில் பிறந்த முத்தினும் அமுதம்படு கழனியில் பிறந்த முத்தே சிறந்தது' என்று காட்டினுராம்.

சிப்பிமுத்துக்கள் இப்போது பெருவாரியாகக் கிடைக்கும் இடங்கள் இந்தியாவில் தூத்துக்குடி, இலங்கை, ஆஸ்திரேலியா, பாரஸீகவளைகுடா என்னு மிடங்களே. இப்போதும் தூத்துக்குடியில் ஆண்டு தோறும் முத்துக்குளித்தல் நடைபெறுகிறது. சிங்களம் அரவாடம், பாரஸீகம், பப்பரம் என்ற இடங்களில் கடல்நடுவே முத்துக்கள் உண்டாவதாக ஸ்மிருதி சாரோத்தரம் தெரிவிக்கிறது.

முற்காலத்தில் சுவாதிநக்ஷத்திரத்தில் சூரியன் சஞ்சரிக்கும்போது மேகத்திலிருந்துவிழும் நீர்த்துளி களால் சிப்பிகளில் முத்துக்கள் உண்டாகின்றன என்று ஸ்மிருதிசாரோத்தரத்தில் காணப்படுகிறது. இப்போதைய விஞ்ஞான அறிவு, மணலில் புரளும் சிப்பிகளினுடைய மெல்லிய தசையில் நுண்மணல் ஒட்டிக்கொண்டு உறுத்த, அதன் தசைநாரிலிருந்து சுண்ணும்புச்சத்தோடு கூடிய வழுவழுப்பான ஊன்நீர்

வெளிப்பட்டு மணலை மூடிக்கொள்ளுகிறது; அதுவே முத்தாகிறது என்று சொல்லுகிறது. இதனை முதன் முதல் கண்டுபிடித்தவர்கள் சீனர்களே. சீனர்களும் ஜப்பானியர்களும் இவ்வுண்மையைக்கண்டு சிப்பிகளை மணலில் போட்டுத் தேய்த்துக் கடலில் விட்டுவிடுவார்களாம். அவை ஐந்து அல்லது ஏழு ஆண்டுகள் நிரம்பியபிறகு, விளைந்தமுத்துக்களையுடைய சிப்பிகள் ஆகும். பிறகு அவற்றைப்பிடித்து முத்தை எடுத்து வாணிகப்பொருளாகப் பயன்படுத்தி வருகின்றனர். அறிவு, அழகு, தோற்றம் கொண்டு மக்களை மதிப்பிடுதல்போல, தோற்றம் ஒளி அழகு எடை இவற்றைக்கொண்டு முத்துக்களை மதிப்பிடுவது வழக்கம்.

வெளிநாட்டுத் தூதரான பிளினி என்பார் 'நவரத்தினங்களில் சிறந்தது முத்தே; இது தாமிரபரணித் தீவில் கிடைக்கிறது; கெய்ஸ் சக்கரவர்த்தியின் ராணியான லோலியோபாலினா நான்குகோடி ஸெக்ஸ்டர் மதிப்புள்ள முத்தணிகள் அணிந்திருப்பதைக் கண்டேன்; கிளியோபாட்ரா என்பாள் தான் நடத்திய விருந்தில் விலை உயர்ந்த முத்தை மதுவில் கரைத்துக்கொடுத்தாள்' என்கிறார்.

மார்க்கோபோலோ என்பார், பாண்டிநாட்டுத் தென்வளைகுடாவில் அறுபது அடிமுதல் எழுபது அடிவரையுள்ள ஆழமான இடங்களில் முத்துக்குளிக்கிறார்கள் என்றும், பாண்டியமன்னன் நூற்றுநான்கு எண்ணிக்கையுள்ள முத்துமாலை அணிந்திருந்ததைக் கண்டு வினவியபோது ஜெபமாலையாகப் பயன்படுகிறது எனக்கூறினான் என்றும் சொல்லுகிறார்.

வாங் - டயான் என்ற சீனவியாபாரி, கொழும்பி லிருந்து சிலகல் தொலைவில் விலை உயர்ந்த முத்துச் சிப்பிகள் கிடைக்கின்றன என்று தம்குறிப்பில் குறித் துள்ளார். இப்பொழுது அந்த இடம் சிலாபம் என்று வழங்கப்படுகிறது.

கி. பி. இரண்டாம் நூற்றுண்டினராகக் கருதப் படும் அலியான் என்னும் அராபிய வணிகர், தென் னிந்திய முத்துக் குளிப்பைப்பற்றிய குறிப்புக்களைத் தருகிருர்.

பெரிப்ளஸ், குமரித்துறையிலிருந்து கொற்கை வரை முத்துக்குளிப்பு நிகழ்கிறது; அருகரு அதாவது உறையூர் முதலிய இடங்களுக்கு அவை கொண்டு போகப்படுகின்றன என்று கூறுகிறது. இவற்ருல் செந்தமிழ்ப்பாண்டிநாட்டுக் கடற்கரையே கி. பி. முதல்நூற்ருண்டுமுதல் நாளதுவரையில் முத்துக் குளிக்கும் இடங்களாக விளங்கிவருகிறது என்பது வெளிப்படையல்லவா ?

சிலப்பதிகாரத்தில் முத்துக்களுக்குக் காற்ருலும், மண்ணுலும், கல்லாலும், நீராலும் குற்றங்கள் உண்டாகக்கூடும் என்றும், அக்குற்றங்களில்லாத சந்திரன், அங்காரகன்போன்ற நிறமுடைய உருண்டை யான முத்துக்களே சிறந்தன என்றும் கூறப்படுகிறது.

விகாரமாகவும், அழுக்குப்படிந்தும், உப்புப் போலவும், கரடுமுரடாகவும், முடிச்சுவிழுந்தும் இருக் கின்ற முத்துக்கள் குற்றமுள்ளன; உருண்டையாய்,

பெரியதாய், தெளிநீர்போன்றதாய் இருப்பன சிறப்பானவை என்று இரத்தினபரீக்ஷை சொல்லுகிறது.

முத்துக்களில் சிப்பி ஒட்டிக்கொண்டிருக்குமானல் குஷ்டரோகத்தையும், மீன்கண்போல ஒளிவிடுமானல் புத்திரநாசத்தையும், நாட்பட்டு உருக்குலேந்த ஒளியற்ற முத்து தரித்திரத்தையும் உண்டுபண்ணும் என்று ஸ்மிருதிசாரோத்தரம் கூறுகிறது.

ஆஸ்திரிய மன்னன் மகுடத்தில் இன்றும் முன்னூறு காரட்டுகள் எடையுள்ள முத்து ஒன்று உள்ளது. ஹென்றி பிலிப் ஹோப் என்பவர் 450 காரட்டுகள் எடையுள்ள ஒரு முத்து வைத்திருக்கிருர். அதன் மதிப்பு ரூபாய் பதினேந்துலக்ஷமாம்.

சோதிட நூல்களில் முத்து சந்திரனுக்கு உரியது என்று சொல்லப்பட்டுள்ளது. சந்திராதிக்கம் உள்ளவர்களுக்கும், கடகலக்கினத்தில் பிறந்தவர்களுக்கும் முத்து நல்வாய்ப்பைத்தரும்; மனச் சாந்தியையும், பெருஞ்செல்வத்தையும் கொடுக்கும்.

ஆனந்தகந்தம் என்ற வயித்திய நூலில் முத்து குளிர்ச்சியும் தித்திப்பும் உள்ளது; கண்நோய், வாத நோய், விஷம், இரத்தபித்தம், எரிச்சல், காய்ச்சல், மயக்கம் இவைகளேப் போக்கவல்லது; நீண்ட ஆயுளேயும், ஒளியையும் கொடுக்கக்கூடியது என்று சொல்லப்பட்டுள்ளது. முத்துக்களே நெல்லி, எலுமிச்சம்பழச்சாறு, பசுவின்சிறுநீர் இவைகளாலும், பின் பசும்பாலிலும் சுத்திசெய்து எடுத்து, வெள்ளேக்கண்டங்கத்தரி

பழரசத்தில் ஊறவைத்து, மடக்கில் இட்டு, சீலைமண் செய்து புடமிட்டால் பஸ்மமாகும்; அப்பஸ்மத்தை உட்கொண்டால் பித்தக்ஷயம், அக்கினிமந்தம், கபம் முதலிய எல்லா நோய்களும் நீங்கும் என்று அனுபவ வயித்திய தேவரகசியம் என்ற நூல் சொல்லுகிறது.

இவ்வாறு முத்து மனிதனுடைய உடல்வாழ்வு உயிர்வாழ்வு இரண்டினுக்கும் உற்றதுணையாக இருக்கிறது என்பதை இதுவரையில் பார்த்தோம். அடுத்துப் பவளத்தை எடுத்துக்கொள்வோம்.

எதிலும் போலிகள் தலைகாட்டியபிறகு உண்மைக்கு அடைமொழிகள் தேவைப்படுகின்றன அல்லவா ? ஆதலால் உண்மைப்பவளம் நற்பவளம் என்று அழைக்கப்படுகிறது. ஆழ்கடலில் உண்டாகும் ஆபத்தைத் தவிர்த்துக்கொள்வதற்காகப் பலகோடி சிறுபூச்சிகள் ஒன்றுகூடி உண்டாக்கிய ஒருவகைக் கெட்டிப்பொருளே பவளம்.

தொலைதுருவிக் கண்ணாடிகள் வாயிலாக ஆழ்கடலின் அடித்தளத்தை நோக்கினால் பவளம் நன்றாகத் திளைத்து அரும்பிப் பூத்துக் காய்த்திருக்கின்ற சிறு செடிகளைப்போலத் தோற்றமளிக்கும். உண்மையில் பவளங்கள் உயிர்வருக்கங்களே. பவளக்காடுகள் இந்துமகா சமுத்திரத்திலும் பஸிபிக்மகா சமுத்திரத்திலும் மிகுதியாக உள்ளன. ஆனால் அவை வெண்மையாகவும் கருமையாகவும் இருக்கின்றன. அவற்றைப் பவளம் என்று யாரும் பாராட்டுவதில்லை. மத்திய தரைக் கடலிலுள்ள செந்நிறப் பவளங்களே பெருமதிப்புடையன.

டியூனிஸ், அல்ஜீரியா, மொராக்கோ முதலிய இடங்களிலும், சார்டினியா, கார்சிகா தீவுகளிலும், லக்ஷத்தீவு மாலாத்தீவுகளைச் சுற்றியுள்ள கடலிலும், இராமேஸ்வரத்தின் அருகிலும் பவளச்சலாபங்கள் நிகழ்கின்றன. ஆழ்நீர்க் கடலிலுள்ள பவளங்களை எடுத்துக் கரையில் கொண்டுவந்துபோட்ட சிலநாட்களில் அப்பூச்சிகளிலுள்ள மெல்லிய தசைநார்கள் அழுகிக் கெட்டு ஒழிந்துபோகும். எலும்புக்கூடு போன்ற வலுவான பகுதிகளே மிஞ்சும். அவற்றை ரோம், ஜினிவா, நேப்பிள்ஸ் முதலிய இடங்களிலுள்ள தொழிற்சாலைகளில் மணிகளாக நறுக்கி மெருகிடுவார்கள். அதன்பிறகே நாட்டிலும் நங்கையர் கழுத்திலுமாகப் பவளம் உலாவத்தொடங்குகிறது.

இந்தியர்களாகிய நமக்கு, பவளம் தரித்தால் மலடு நீங்கும்; கண்ணேறு கழியும்; பேய்பிசாசுகள் தீண்டா என்ற நம்பிக்கை ஏற்படுகிறது. எகிப்து, பிரான்ஸ், மற்றும் ஐரோப்பிய நாடுகளில் பவளங்களை அணிந்து மகிழ்ந்தனர். ரோமர்கள் சிறந்த வயித்தியச் சரக்காகப் போற்றிவந்தனர். நமது சித்தவயித்தியத்துள் பவள பஸ்மம் மிகமிகப் பாராட்டப்பட்டுள்ளது.

பண்டைக் காலத்தில் கிரேக்கர்கள் தமிழ் நாட்டோடு வாணிகத்தொடர்பு கொண்டிருந்தபோது பவளங்கள் இறக்குமதி செய்யப்பட்டன. செந்தமிழ் நாட்டில் பவளங்களுக்குள்ள சிறப்பைப் பார்த்த கிரேக்கர்கள் தங்கள் ஆயுதங்கட்குப் பவளம் அணிந்து மகிழ்ந்தனர். ரோமர்கள் தமது குழந்தைகளுக்குத் தீங்கு வராமலிருக்கப் பவளமாலைகளைச் சூட்டினர்.

243
5.47



இத்தாலியரும் நம்மைப்போலவே கண்ணேறு கழிக்க அணிந்தனர். அன்றைக்குப் பவளத்திற்கு நாம் கொடுத்த மதிப்பினுல் இன்றைக்கு உலகமுழுதுமே பாராட்டுகிறது. சீனநாட்டுச் செல்வர்கள் பவளத்தால் பித்தான் செய்து அணிகிருர்கள்.

பவளத்தில் சிவப்பு, கருஞ்சிவப்பு, வெண்சிவப்பு முதலிய பலநிறங்கள் உண்டு. நல்ல சிவப்புள்ள நற்பவளமே உயர்ந்ததும் நன்மை புரிவதுமாகும். இளங்கோவடிகள்,

"கருப்பத் துளையவும் கல்லிடை முடங்கலும்
திருக்கும் நீங்கிய செங்கொடி வல்லியும்"

என்று கூறுகிருர். உள் துளையுடையனவும், கல் மண் உடையனவும், வளைவுடையனவும் விலக்கத்தக்கன என்பது அவர் முடிவு. சாம்பல் படிந்திருத்தல், சிதைவு, முறிவு, கனமற்றது, வெண்மையானது இப்படி ஏழு குற்றங்கள் உள்ளன என்று வாகடம் வகுக்கிறது. உருண்டையானதும், நீளமானதும், விளைந்ததும், காயமில்லாததுமான பவளங்களே அணிவதற்கு உரியன. பவளம் பெண்களுக்குரியது; அணிவதால் மகப்பேறு அடைவர் என்று திருவிளையாடற் புராணம் கூறுகிறது.

பவளத்தை எலுமிச்சம்பழச்சாற்றில் ஒருநாள் முழுதும் ஊறவைத்து மறுநாள் வெந்நீரில் கழுவினுல் சுத்தமாகும். பிறகு அதனை மூன்றுநாள் எருக்கம் பாலில் ஊறவைத்து, அகலிலிட்டு, சீலைமண் செய்து

கஜபுடமிட்டால் பஸ்மமாகும். பஸ்மத்தைத் திப்பிலி, தேன் இவற்ருேடு கலந்து உண்டால் காசரோகம், விக்கல் எல்லாம் நீங்கும். கடுகுரோகணி, நிலவேம்பு, கடுக்காய் இவைகளுடன் உண்டால் கொடிய சுரம் விலகும். சர்க்கரையுடன் கலந்து அருந்திஞல் தாது கெட்டிப்படும். அனுபானவகையில் பவள பஸ்மம் பலநோய்களை நீக்கும் என்று வயித்தியநூல்கள் விரிவாகச் சொல்லுகின்றன. செவ்வாய் உச்சமானவர்களும் தோஷமுள்ளவர்களும் பவளம் அணியின் இன்புறுவர். இனி கோமேதகத்தைப் பார்ப்போம்.

கனிகளிலிருந்து எடுக்கப்படும் மணிவகைகளுள் இதுவும் ஒன்று. கோமேதம். கோமேதகம் என இது வழங்கப்பெறும். கோமேதம் என்பதற்குப் பசுவின் கொழுப்பு என்பது பொருள். பசுவின்கொழுப்புபோல் செம்மையும் வெண்மையுங்கலந்த ஒளியுடைமையால் இப்பெயர் வந்தது. இதுவும் வயிர வகையைச் சார்ந்ததே. தேன்சொட்டின் நிறமாகவோ வெள்ளைப் பசுவின் சிறுநீர் நிறமாகவோ விளங்குவதால் இதற்கு இப்பெயர்வந்தது என்று ஸ்மிருதிசாரோத்தரம் கூறுகிறது.

வலாசுரனுடைய ஊன்நீர் விழுந்த இடங்கள் கோமேதகச் சுரங்கங்கள் ஆயின என்பது வரலாறு. ஆலாஸ்யமான்மியம் தேன்சொட்டு, பசுவின் சிறுநீர், பசுநெய், பொன் இவைகள் கலந்த நிறமுடன் வழுவழுப்பாக உருண்டையாக இருப்பது கோமேதகம் என்று குறிக்கிறது. இதனை அணிந்தால் இன்பம் பெருகும்; புண்ணியம் மிகும்; தனதானியம் செழிப்புறும்: சந்தானவிருத்தி ஏற்படும். ஒளியில்லாதது,

மிக இலேசானது, தகட்டு வடிவானது, வெள்ளை படர்ந்தது, பூனைக்கண் போன்றது. அவலைப்போல் பலகையாக இருப்பது, மேடுபள்ளமாக இருப்பது; இப்படியுள்ள கோமேதகங்கள் குற்றமுடையன. இம் மணி நமது நாட்டில் சிந்துநதிதீரத்திலும் இமயமலைச் சரிவுகளிலும் கிடைக்கிறது. சில தங்கநிறமாகவும் சில பச்சை ஒளிகலந்து வீசுவதாகவும் காணப்படும்.

இம்மணி இராகுவுக்கு விருப்பமானது. பிறந்த லக்கினத்தில் இராகு இருப்பின் இம்மணி அணிபவனுக்குக் கீர்த்தியைக்கொடுக்கும். கபம், பலமின்மை இவைகளை நீக்கக் கோமேதக பஸ்மம் சிறந்தது. இதை முறைப்படி ஊறவைத்து, சுத்திசெய்து, பிறகு கருஊமத்தையிலைச்சாற்றில் மூன்றுநாள் போட்டிருந்து எடுத்து, சீலைமண்செய்து உலகடத்தில்வைத்து ஊதினுல் பஸ்மமாகும்.

“ வாதபித்த தோடத்தை
மாற்றும் மலக்கட்டறுக்கும்
ஓதுமந் தாக்கினியை
ஓட்டுங்காண் - மீதில்
அழல்தரு விகாரம்
அகற்றும் ஒளிசெய்யும்
கழறுகின்ற கோமேத கம்.”

என்று பதார்த்தகுணசிந்தாமணி கூறுகிறது.

இப்படி வயிரத்தை அடுத்து முத்து, பவளம், கோமேதகம் ஆகிய மணிகளைப்பார்த்தோம். பிறகு, ஏனைய மணிகளைப்பற்றிச் சிந்திப்போம்.

# மூன்ருவது பேச்சு

எல்லாம் பசுமையாக இருக்கின்றன என்ருல் செல்வம் கொழித்து எல்லா வளங்களும் நிறைந்திருக்கின்றன என்பது பொருள். பசுமை ஒரு கவர்ச்சிகரமான நிறம். எங்கெல்லாம் அறிவும் தெளிவும் அருளும் நிறைந்திருக்கின்றதோ அங்கே பசுமை இருக்கும். அதனுலேயே சிவசக்தி பசுமை நிறம் அமைந்தவளாகப் போற்றப்படுகிருள். பசுமையான பொருள்களே உணவைச் சுரந்து பரிந்து கொடுக்கின்றன. சிவசக்தியாகிய தாயே பால்சுரந்து பரிந்து ஊட்டுகிருள். இப்படிப் பல கருத்துக்களைத் தொடர்பாக எண்ணுவோமானுல் பசுமை தனிச்சிறப்புடையது என்பது விளங்கும். நவரத்தினங்களுள் பச்சையானது மரகதம்.

மரகதம் கடினமானது. ஒளிக்கதிருடன் மென்மையாக இருப்பது. இதன்மீது சூரிய ஒளிபட்டால் பச்சைநிறக் கிரணங்கள் சுற்றுப்புறத்தில் ஊடுருவிப் பாயும். இம்மணிகள் கொலம்பியா, அமெரிக்கா, ரஷ்யாவில் உள்ள யூரல், வடகரோலினு, இலங்கை, மடகாஸ்கர், கலிபோர்னியா ஆகிய இடங்களில் கிடைக்கின்றன. இதுவரை கிடைத்த மரகதங்களில் மிகப்பெரியது 1350 காரட் எடையுள்ளது. இது திவான்ஷையர் இளவரசரிடம் இருக்கிறது. இதைத் தவிர வேறு இரண்டு மரகதக்கற்கள் ஆங்கிலேயருடைய காட்சிச்சாலையில் இருக்கின்றன. இவை மிகத் தூய்மையானவை. விலையுயர்ந்தவையுங்கூட.

வலாசுரனுடைய பித்தநீரைச் சில பறவைகள் கவர்ந்து சென்றன; அது விழுந்த இடமெல்லாம் பச்சைக்கனிகள் உண்டாயின என்பது ஒருகருத்து. கருடனுடைய அரைஞாணில் கட்டிய அருண னுடைய ஒடுகள் சிதறிய இடம் மரகதச் சுரங்கங்க ளாயின என்பது மற்ருெரு வரலாறு. இவைபோல மரகதத்தின் பிறப்பைப்பற்றி இன்னும் எத்தனேயோ வரலாறுகள். இந்தியநாட்டுப் புராணங்களும் இதிகா சங்களும் பலவகையாகப் பகர்கின்றன.

இந்தப் பச்சைக்கல்லுக்கு, கருடமதம் என்றும் ஒருபெயருண்டு. இம்மணி புதன் என்னும் கோளுக்கு உரியது. ஆனந்தகந்தம் என்னும் வடமொழிநூல் இம்மணிகள் துருக்கதேசத்திலுள்ள சமுத்திரக்கரையி லும், ஸமீராரோஹணம் என்னும் மலேயிலும் விளேவ தாகச் சொல்லுகின்றது, இந்தக்கருத்தை இரத்தின பரீக்ஷை என்னும் நூலும் வலியுறுத்துகிறது. இப் பச்சைமணிக்குப் பலவகையான குணங்களும் குற்றங் களும் பழைய நூல்களில் சொல்லப்படுகின்றன. சிலப்பதிகாரம்,

"ஏகையும் மாலேயும் இருளொடு துறந்த
பாசார் மேனிப் பசுங்கதிர் ஒளியவும்"

என்று பேசுகின்றது. சிலப்பதிகாரவுரை கருகல், வெள்ளே, கல், மணல், கீற்று இவைகள் விழுந்திருந் திருத்தல், குழியுடைமை, தாரோடியிருத்தல் இவை முதலாய குற்றங்கள் இன்றி எட்டுக்குணங்கள் உடை யனவாக இருத்தல் வேண்டும் எனக் குறிக்கிறது. குணங்கள் எட்டையும்,

"நெய்த்த மயிற்கழுத்து ஒத்தபைம் பயிரில்
பசுத்தல் பொன்மை தன்னுடன் பசுத்தல்
வக்கி பாய்தல் பொன்வண் டின்வயிறு
ஒத்துத் தெளிதலோடு எட்டும் குணமே"

என்னும் நூற்பாவில் காணலாம்.

இரத்தினபரீக்ஷை என்னும் நூலில் பச்சைமணி காடம், சுப்பிரம், காளம் என்னும் மூன்று குணங்களுடையது என்று சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் அதில் அப்போதுதான் முளைத்த பசும்புல்லின் நிறத்தையுடையது காடம்; மென்மைத்தன்மை உடையது உல்லசிதம்; குளத்துப்பாய்ச்சலில் விளைந்த செந்நெற் பயிரில் தோன்றிய முத்துப்போன்ற நிறமுடையது பேசலம்; பசுங்கிளியின் சிறகுபோன்றது பித்தகம்; துளசியிலை போன்றது முத்தம்; தாமரையிலை போன்றது பிதுகம்; இந்த ஆறுவகையான பச்சைகளும் நற்குணம் வாய்ந்தவை; அணியத்தக்கவை; இதனை அணிபவர்களுக்கு எல்லாவளங்களும் பெருகும்; சேனையும் தானையும் புடைசூழ நெடிது வாழ்வர் என்றும் சொல்லுகிறது.

எலுமிச்சை, அலரி, கருங்குவளை, தாமரை இவைகளின் இலைகள், மயிலிறகு, பசும்புல் இவைபோன்ற நிறமுடையன குற்றமுள்ள மணிகளாம். இம்மணிகளை அணிதலும் கூடா.

இந்தப் பச்சைமணியின் இயற்கையான குணம் சாத்துவிகம். மரகதமணியை முறைப்படி சுத்திசெய்து

பஸ்மம் செய்யும் முறைகளும் அவற்றிற்குரிய அனுபானங்களும் வயித்தியநூல்களில் விரிவாக விளக்கப் பட்டுள்ளன.

"தாதுதரும் பூதபை சாசந் தமைஓட்டும்
மீதுவரு புண்ணே விலக்குங்காண் - தீதுபுரி
மச்சை அகற்றும் மதுமேகம் போக்கும்
பச்சை யதுமதுரம் பார்"

என்ற இப்பாடலால் மரகதமணி செய்யும் நன்மைகளை அறியலாம். இப்படி மரகதத்தின் சிறப்புக்களைத் தெரிந்துகொண்ட நாம் அதனைச் சோதிக்கும் முறையையும் தெரிந்துகொள்ளுதல் மிக அவசியம்.

ஒரு மரகதத்தை எடுத்து ஒரு டம்ளர் பாலில் போட்டால் பால்முழுதும் அதன் ஒளி பரவிப் பச்சையாகத் தோன்றும். அப்படித் தோன்றினால் அது உண்மையான மரகதம் என்று அறிந்துகொள்ளலாம். இதுவரை பச்சையைப் பார்த்த நாம் இனி நீலத்தையும் பார்ப்போம்.

நீலம் என்றவுடன் கண்ணன், காமன், இராமன் முதலான தெய்வநினைவு வருவது இயற்கை. ஆனால் நீலமோ சனிக்கோளுக்கு உரிய மணி. இதனை அணிகின்ற மக்களுக்குரிய குணங்களுக்கேற்ப இம் மணியும் நிறம் மாறும் என்று தெரிகிறது.

அணிபவர் துரோகபுத்தியுடையவராயின் இக்கல் பாக்கு நிறமாகும். வஞ்சகமும் அடுத்தவரைக் கெடுக்கும் தன்மையும் உடையவராயின் கருமை மிகுந்து

காட்டும். இம்மணி மாணிக்கம் அல்லது கெம்புச் சுரங்கங்களை அடுத்துக் கிடைக்கின்றன.

வரலாற்றுக்காலத்தில் கலிங்கதேசத்தில் இம்மணி முதன்முதல் கண்டுபிடிக்கப்பட்டது. சாதிநீலம் பெரும்பாலும் உருண்டைவடிவாக இருக்கும். சிங்களத்தீவின் நடுவிலும், இராவண கங்காநதிக்கரையிலும், பத்மாகரத்திலும், குருக்ஷேத்திரத்திலும் இம்மணி கிடைப்பதாக ஸ்மிருதிசாரோத்தரம் கூறுகிறது. ஆயினும் பர்மா, ஸயாம், இலங்கை, காஷ்மீர், வடமேற்கு இமாலயப்பகுதிகள் ஆகிய இடங்களிலும் இந்நீலமணிகள் மிகுதியாகக் கிடைக்கின்றன.

நீலத்தில் செம்மைகலந்த நீலமும் உண்டு. தனி நீலமும் உண்டு. செம்மைகலந்த நீலம் இரத்தினகாந்தி எனப்படும். இது ஜலநீலம் என்றும் அழைக்கப்படும். தனிநீலம் இந்திரநீலம் எனப்படும். இதுவே சிறந்தது. இம்மணிக்கும் மாசு படிதல், மணல் பதிந்திருத்தல், பொரிசல், உடைசல், மண்ணிடைப்படுதல், கல்லிடைப்படுதல் முதலான குற்றங்கள் உண்டு. இப்படிக் குற்றமுள்ள மணிகளை அணியவேகூடாது.

நல்ல கனமும், மனம் கவரும் காந்தியும், நல்ல பூரிப்பும், பசும்புல்லை ஒட்டிக்கொள்ளும் தன்மையும் இந்நீலத்தின் குணங்களாம். இதனைத்தரிப்பவனுக்குச் செல்வம் புகழ் ஆயுள் எல்லாம் நிறையும். நீலத்தின் நடுவில் வானவில்போன்ற ஒளியிருந்தால் அதுதான் இந்திரநீலம் என்று ஆலாஸ்யமான்மியம் சொல்லுகிறது.

பாலில்போட்டவுடன் நூறுமடங்கு நீலநிறத்தை உண்டுபண்ணுவது மகாநீலம் என்று பெயர்பெறும். வலாசுரனுடைய கண்களிலிருந்தும், சிவபெருமான் கழுத்திலிருந்தும் நீலம் உண்டானதாக ஈசுவரதீக்ஷிதீயம் கூறுகிறது.

"நீலத் தியல்பு வகுக்குங் காலை
நால்வகை வருணமும் நண்ணுமா கரமும்
குணம் பதினொன்றும் குறை இருநான்கும்
அணிவோர் செயலும் அறிந்திசி னோரே"

என்ற சிலப்பதிகார உரைச்சூத்திரம் குணம் பதினொன்று, குற்றம் எட்டு எனக்கூறுகிறது. இவை பெரும்பாலும் இரத்தினபரீக்ஷை என்ற நூலை ஒட்டியே இருக்கிறது.

இத்தகைய சிறந்த நீலமணியை முறைப்படி சுத்தி செய்து, வச்சிரமூசையில் அடைத்து, உலையில்வைத்து ஊதினால் உடனே பஸ்மமாகும். இப்பஸ்மத்தை உட்கொண்டால் குதிக்கால்வலி, மதிமயக்கம், மேகபித்தம், சூலவாயு முதலான எல்லா நோய்களும் அகலும்; புத்தியும் போகமும் விளையும் என்று பதார்த்தகுணசிந்தாமணி முதலிய வயித்தியநூல்கள் விளங்கக்கூறுகிறது. அடுத்து மாணிக்க மணியை எடுத்துக்கொள்வோம்.

'சிவப்பு ஒரு அழகு; சூடு ஒரு ருசி' என்பது நமது நாட்டுப் பழமொழி. கோள்களில் சூரியன் தலைமை வகிப்பதுபோல மணிகளுள் தலைமையானது

மாணிக்கமணி. செம்மையான மாணிக்கம் இலங்கையிலும், டென்னஸி, வடகரோலினு இப்பகுதிகளிலும், பர்மாவிலும் மிகுதியாகக் கிடைக்கின்றன. ஆயினும் பர்மாவிலுள்ள பெரிய சுரங்கங்களில் கிடைப்பவைகளே மிகச்சிறந்த மணிகள்.

மாணிக்கங்களில் நிறம்பற்றி நான்கு வகைகள் உண்டு. தாமரைபோல வெண்மையும் சிவப்பும் கலந்து சற்றுக்கடினமாக உருண்டை வடிவில் காணப்படுவது பத்மராஜா என்றழைக்கப்படும். மிகச்சிவப்பாக இருப்பது குருவிந்தஜம். சிவப்பும் மஞ்சளும் கலந்தது ஸௌகந்தி. நீலவர்ணமாக அல்லது ஆகாய வர்ணமாக விளங்குவது நீலகந்தி. இவ்வொவ்வொன்றிலும் குணம், குற்றம் இவைகளின் கலப்பால் பல வகைகள் உண்டு. குற்றக்கலப்பு இல்லாத - குணம் நிறைந்த மாணிக்கங்களே அணிவதே நலம். அப்படி அணிவதால் வீரியமும் செல்வாக்கும் புகழும் விளையும் என்பது தொன்றுதொட்டு வந்த நம்பிக்கை.

மாணிக்கத்துள் ஒன்ருகிய நீலகந்திமணி, கங்கையில் விளைவதாக உத்பலபரிமளம் என்ற நூல் சொல்லுகிறது. சிலப்பதிகாரத்தில்,

**"பதுமமும் நீலமும் விந்தமும் படிதமும்**
**விதிமுறை பிழையா விளங்கிய சாதியும்"**

என்று குறிக்கப்பெற்றுள்ளது. அதற்கு உரைவகுத்த அடியார்க்குநல்லார் பதுமம் - பதுமராகம், சாதுரங்கம் எனவும், நீலம் - நீலகந்தி, சௌகந்தி எனவும், விந்தம் -

குருவிந்தம், இரத்தவிந்து எனவும் பெயர் பெறும்; படிதத்திற்குக் கோவாங்கு என்ற ஒரு பெயரும் உண்டு என்றும் சொல்லி, இம்மணிகளின் நிறவேறு பாடுகளேயும் மேற்கோள்காட்டி விளக்கியுள்ளார். கல்லாடத்திலும் இம்மணியின் குணங்களும் நிறங் களும் பேசப்பட்டுள்ளன. இவற்ருல் வயிரத்தோடு ஒத்த தலைமை மாணிக்கத்திற்கும் எல்லா நாட்டிலும் இருந்தமை புலனும்.

முறைப்படி சுத்தி செய்யப்பட்ட மாணிக்க பஸ்மம் மெலிந்த உடலுக்கு வலிமையை ஊட்டும்; வாதநோய்களேயும், க்ஷயரோகங்களேயும் அகற்றும் என்றெல்லாம் சரபேந்திரவயித்தியரத்திஞவளி முதலிய நூல்கள் கூறுகின்றன. இனி வயிடூரியத்தை எடுத்துக் கொள்வோம்.

காளிதாஸன் குமாரசம்பவத்தில் புதிய மேக சப்தத்திஞல் விடூரபூமி முளேத்தெழுந்தது என்கிருர். ஆனந்தகந்தம் இடியோசையால் விடூரபூமியிலிருந்து வயிடூரியம் உண்டாகின்றது என்கிறது. வயிடூரியம் என்றதன் பெயர்க்காரணமே இந்த வரலாற்றை மெய்ப்பிக்கிறது.

இந்த விதுரம் என்பது இப்போது வேதுரம் என வழங்குகிறது. பழங்கால நகரமாகிய காம்போதியை அடுத்துள்ளது என்று ரஸஜலநிதி கூறுகின்றது. ஆலாஸ்யமான்மியம் மகதம், பாரஸீகம், சிங்களம், பொதியம் ஆகிய இடங்களில் வயிடூரியச்சுரங்கங்கள் இருப்பதாதத் தெரிவிக்கிறது.

மூங்கில் இலை, பூனைக்கண், மயிற்கழுத்து இவை போன்ற ஒளியுள்ள வயிடூரியமணிகளே மிகச் சிறந்தன. உயர்ந்த வயிடூரியம் எந்தப்பக்கம் திருப்பினாலும் நூலிழைபோன்ற ஒளிவீசும். இதுதான் நூலோட்டம் எனப்படும். கருப்பான நீர்போன்ற நிறமுள்ளது, கருமேகம் போன்ற நிறமுள்ளது, தகட்டு வடிவானது, இத்தகைய மணிகள் அணிந்துகொள்ளத் தக்கன அல்ல.

இம்மணி கேது என்னும் கோளுக்கு மிக விருப்பமானது. கேது தோஷமுள்ளவர்கள் இதனை அணியின் எல்லா நன்மைகளையும் அடைவர்.

நன்கு சுத்திசெய்யப்பட்ட வைடூரிய பஸ்மம் அனுபானவகையில் எல்லாவியாதிகளையும் போக்கும் என்பது வயித்தியரத்தினவளியின் கருத்து. சீதவாதம், சிலேஷ்மம், புளியேப்பம், காதுசூலை, குன்மம், பித்தம் ஆகிய நோய்கள் அகலும் என்று பாதர்த்தகுண சிந்தாமணி பகர்கிறது. இனி எஞ்சியுள்ள புட்பராக மணியையும் சற்று எண்ணிப்பார்ப்போம்.

புட்பராகமணி வயிரம் போன்ற மணி. சிறிது சிவப்பு கலந்த மஞ்சளுடன் விளங்குவது. மேல்பாகம் வட்டமாகவும் மழமழப்பாகவும் உள்ள புட்பராகமே மிகச்சிறந்தது. இக்கற்கள் பாறைகளின் நடுவே உண்டாவது. தற்காலம் ரஷ்யா, பிரேஸில், இலங்கை ஆகிய இடங்களிலிருந்தே பிறநாடுகளுக்கு ஏற்றுமதிசெய்யப் படுகின்றது. மொகலாய மன்னனான ஔரங்கசீப் 160 காரட் எடையுள்ள கல்ஒன்றை வைத்திருந்தான்.

அதன் மதிப்பு இருபது லக்ஷம் என்று இரத்தின வரலாற்று நூலிலிருந்து தெரிகிறது.

வியாழனுக்கு மிக உகந்தது இம்மணி. ஆதலின் தனுசு அல்லது மீனலக்கினத்தில் பிறந்தவர்களும் குரு பலம் பெற்ற ஜாதகக்காரர்களும் இதனை அணிந்து கொண்டால் மிகப்பெரிய நன்மைகளை அடையலாம்.

" பூச உருவில் பொலங்தெளித் தனையவும் "

என்று இம்மணியைப்பற்றிச் சிலப்பதிகாரம் பேசுகிறது. பூசநக்ஷத்திரத்தைப் போலவும், பொன்னை உருக்கித் தெளியவைத்தாற்போலவும் நிறமுடையது புட்பராகம் என்பது பொருள்.

புட்பராகமணி அணிந்தவருக்கு நோய்வரவிருந்தால் முன்னரே இந்த மணி நிறம் மாறிவிடுமாம். அதைக்கொண்டு ஏதோ ஒரு நோய் நமக்கு வரவிருக்கிறது என்று அவன் முன்னரே தெரிந்து எச்சரிக்கையாக இருக்கலாமல்லவா?

மனத்துணிவில்லாதவர்கள், பிறரைச் சந்தேகிப்பவர்கள், தனக்குத்தானே கேடுசூழ்பவர்கள் ஆகியோர் இம்மணி அணியின் பெரும்பாதுகாப்பாகும்; ஆதலின் இது இரட்சாகரரத்தினம் எனப்படும் என்று ரஸஜலநிதி கூறுகிறது. புட்பராகபஸ்மம் புஷ்டியை உண்டாக்கும் என்று அகத்தியர் இரத்தினசாரம் கூறுகிறது. சுரம், விக்கல், வாததோஷம் ஆகிய நோய்களையும் போக்குதற்குரிய சிறந்த மருந்தாகவும் இப்பஸ்மம் பயன்பட்டு வருகிறது.

இதுவரை இரத்தினங்களைப்பற்றிப் பேசிய மூன்று பேச்சுக்களால் நாமறிந்துகொண்ட இந்நவமணிகளை மதிப்பிடும் முறையைப்பற்றியும் ஸ்மிருதிசாரோத்தரம், சாணக்கிய அர்த்தசாஸ்திரம், சுக்கிரநீதி முதலிய நூல்கள் மிக அழகாகக் குறிப்பிடுகின்றன. நிறுப்பதற்குரிய தராசுத்தட்டு, தராசுக்கயிறு, முள், தோரணம் இவைகளின் அமைப்பு முறைகளுங்கூடச் சொல்லப்படுகின்றன. சுக்கிரநீதியில் நிறுத்தலளவைக்கு உரிய பட்டியல் ஒன்று கொடுக்கப்பட்டுள்ளது. நவமணிகளுள் கோமேதகம்மட்டும் நிறுத்தலளவைக்கு உட்படாதது. வயிரம் முதலிய எல்லா மணிகளும் கனத்தையும் பருமனையுங்கொண்டு மதிப்பு உயர்வன. ஆனால் கோமேதகமோ எவ்வளவுக்கெவ்வளவு எடை குறைவாக - உருவில் பெரியதாக இருக்கின்றதோ அவ்வளவுக்கவ்வளவு விலையும் உயர்ந்துகொண்டே போகும்.

எல்லா இரத்தினங்களையும் எல்லா நாட்களிலும் மதிப்பிடுதல் கூடாது. மாணிக்கம் கோமேதகம் இவற்றை ஞாயிற்றுக்கிழமையிலும், முத்து வைடூரியங்களைத் திங்கட்கிழமையிலும், பவழம் மரகதம் புட்பராகம், வயிரம், நீலம் இவைகளை முறையே செவ்வாய் முதல் சனி ஈருன ஏனைய கிழமைகளிலும் மதிப்பிடுதல் மரபு.

இந்நவரத்தினங்களை ஒரேமோதிரத்தில் அமைத்து அணிவதும் உண்டு. மாணிக்கத்தை நடுவில்வைத்து அதன் கிழக்கில் வயிரத்தையும், தென்கிழக்கில் முத்தையும், தெற்கில் பவழத்தையும், தென்மேற்கில்

கோமேதகத்தையும், மேற்கில் நீலத்தையும், வடமேற்கில் புட்பராகத்தையும், வடக்கில் வயிடூரியத்தையும், வடகிழக்கில் மரகதத்தையும் அமைத்து இழைக்க வேண்டும். இப்படி அமைந்த நவரத்தின மோதிரமே அழகும் தெய்வபலமும் தேடித்தருவன.

இதே அமைப்பில் நவரத்தினங்களைவைத்து, அந்தந்த இரத்தினத்திற்குரிய கோள்களை அதில் நிறுவி, நாடோறும் வழிபாடுசெய்வதும் உண்டு. அப்படியில்லாமல் நவரத்தினங்களாலும் தனித்தனியே சிவலிங்கம் அமைத்து வழிபடும் மரபும் தமிழ்நாட்டில் தொன்றுதொட்டே உண்டு. இதுபற்றிச் சிவாகமங்கள் விளக்கமாகத் தெரிவிக்கின்றன.

ஒளியிருக்கும்போதே இருளும் இருப்பதுபோல உண்மை இரத்தினங்களோடு போலி இரத்தினங்களும் தொன்றுதொட்டே நாட்டில் நிலவத்தொடங்கின. போலி இரத்தினங்கள் செய்யும் முறைகள் பலவகையாக இரத்தினபரீக்ஷை, ஸ்மிருதிசாரோத்தரம் என்ற நூல்களில் கூறப்பட்டுள்ளன.

நவரத்தினங்களோடு கர்கேதனம், ருத்திராக்ஷம், விபுலம், விமலகம், இராசமணி, ஸ்படிகம், சந்திரகாந்தம், சங்கம், பிரமமணி, சோதிரசம், ஸீவ்யகம், மகாநீலம், ஸௌகந்திகம் இவைகளையும் சேர்த்து இரத்தினங்கள் இருபத்திரண்டு என்று உத்பலபரிமளம் கூறுகிறது. ருத்திராக்ஷம் என்பது நாம் இன்று அணியும் ருத்திராக்ஷமாகிய மரத்தின் விதையன்று. நடுவில் நல்ல வெண்மையும் சுற்றிலும் இந்திரநீலம் போன்ற

கருமையும் பெற்றிருக்கும் ஒருவகை மணியே. பஸ்மாங்கம், ஹரிஹரம், கருடோத்காரம், தார்க்ஷியம் முதலிய வேறு சில மணிகளையும் இரத்தினபரீக்ஷை விளக்கிச்சொல்லுகிறது.

இவ்வண்ணம் நமது நாட்டின் மிகப்பழமையான நாகரிகத்தின் சின்னமாய், அழகுவாழ்வாகிய உலக வாழ்வு பொருளாதார வாழ்வுகளிலும், இரஸாயன ஞானவாழ்வாக வயித்திய நூல்களிலும், ஆத்மீக வாழ்வாகிய தெய்வவாழ்வாகப் பூசை முதலியவற்றிலும் நவரத்தினங்கள் பயன்பட்டுவருவதை அறிகிறோம். ஆகவே எல்லாவகையிலும் நாம் ஈடேற நவரத்தினங்களைத் தரமறிந்து, குணமறிந்து அணிந்து நலம் பெறுவோமாக.